11th March 1961]

SRI T. S. RAMASWAMY : சில கல்லூரிகளில் ஆத்தரைஸ்ட் நம்பர் அப் ஸீட்ஸ் அதிகமாகயிருந்தும் அதற்கான மனுக்கள் வந்தும் ஆத்தரைஸ்ட் ஸீட்டுகளுக்கு இடம் கொடுக்கப்படாததன் காரணமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மனு போட்டால் எல்லோரும் வருகிறார்கள் என்றில்லை. எல்லாக் காலேஜுக்கும் மனு போட்டு வைக்கிறார்கள். வருகிற அளவில் எடுக்கப்பட்டு வருகிறது.

SRI T. SAMPATH : May I know on what basis the selection is made for these Selection Committees?

THE HON. SRI C. SUBRAMANIAM : On an *ad hoc* basis.

*Finger Print Expert*

*751 Q.—SRI M. P. SARATHI : கனம் உள்துறை அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இந்த ராஜ்ய காவலர் துறை, புலன் விசாரணைப் பிரிவு, விரல் ரேகைப் பதிவக நிபுணர் ஒருவரின் சேவையை சிறிது காலத்திற்கு கொடுத்து உதவும்படி ஏடன் சர்க்காரிடமிருந்து மத்திய சர்க்கார் மூலம் கோரிக்கை வந்ததா ?

(இ) இந்தக் கோரிக்கை என்ன ஆயிற்று ?

THE HON. SRI M. BHAKTHAVASALAM : (a) Yes, Sir.

(b) The request was made by the Intelligence Bureau, Government of India, direct to the Inspector-General of Police, Madras. As the services of the personnel in the Finger Print Bureau, Vellore, could not be spared without detriment to the working of the Bureau, a ' nil ' reply was sent to the Government of India in the matter.

SRI T. T. DANIEL : May I know whether it is a fact that the Finger Print Bureau of the Crime Branch of our Police Department is the best in our country because they have made certain progress in this field?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I should not say that and it is for others to express whether it is the best and all that.

*Dispensary (Nilakkottai)*

*752 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நிலக்கோட்டை எம்.எப். டிஸ்பென்ஸரியை தேனிக்கு மாற்ற ஜில்லா அபிவிருத்தி கவுன்ஸில் நிறைவேற்றிய தீர்மானம் என்னவாயிற்று ?

[11th March 1961

THE HON. SRI M. A. MANICKAVELU : The proposal to open a regular Local Fund Dispensary at Theni utilising the savings resulting from the provincialisation of the Local Fund Dispensary at Nilakottai was negatived by the Government.

SRI N. R. THIAGARAJAN : 20,000 மக்களுக்கு மேல் இருந்தும் சுற்றிலும் பத்து மைல்களுக்கு ஆஸ்பத்திரியேயில்லை என்றும் இதுபற்றி நான்கு வருடங்களாக நான் கூறியிருக்கிறேனே. அங்கு சர்க்காராவது ஒரு ஆஸ்பத்திரி திறப்பார்களா ? அல்லது டெவலப்மெண்ட் கௌன்ஸிலில் நிறைவேற்றப்பட்ட தீர்மானமாவது அமுல் செய்யப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : தேனீயில் ஒரு ப்ரைவட் ஆஸ்பத்திரியிருக்கிறதாம். மேலும் படுக்கைகளோடுள்ள ஆஸ்பத்திரி வைப்பதற்கு நிறையப் பணமாகும். அது முடியாத விஷயம். மேலும் அதைவிட அவசியமான இடங்கள் வேறுயிருக்கின்றன.

SRI N. R. THIAGARAJAN : தேனீயில் ப்ரைவேட் ஆஸ்பத்திரியிருப்பதாகக் கூறுவது சரியல்ல. அங்குள்ள கிருஸ்தவ மெஷினரி ஆஸ்பத்திரி என்ற பெயரை வைத்து ஒன்றை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். அங்கு பெண்களையும், குழந்தைகளையும் தவிர மற்றவர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. அதற்கு சர்க்காரிலிருந்து ஆண்டொன்றுக்கு 1,000 ரூபாய் கிராண்ட் கொடுக்கப்பட்டு வந்தது, இப்பொழுது நிறுத்தப்பட்டு விட்டது. அந்த ஆஸ்பத்திரி உருப்படியாக இப்பொழுது நடக்கவில்லை, அங்கு டாக்டரும் இல்லை. ஆகவே இதுபற்றி பரிசிலனை செய்யப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : பரிசிலனை செய்யப்பட்டு தேனீயைவிட வேறு ஒரு இடத்தில் டிஸ்பென்ஸரி வேண்டியது அவசியம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. கலெக்டர் அவர்கள் பார்த்து எந்தயிடத்தில் மிகவும் அவசியமோ அங்கு வைக்க ஏற்பாடு செய்வார். அங்கு இப்பொழுது ஆஸ்பத்திரி காத்தலிக் மிஷனல் நடத்தப் படுகிறது. அங்கு, " Free medical aid is given " என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

## *Waterways*

* 753 Q.—SRI A. VEDARATHNAM : கனம பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மத்திய அரசாங்கம் நியமித்த ஜலதார போக்குவரத்தைப் பரிசிலித்த குழு " Central Waterways Commission " அதன் ரிப்போர்ட்டைச் சமர்ப்பித்து விட்டதா ?

(இ) அப்படியானல், நம் மாநிலத்திலுள்ள பக்கிங்ஹாம் கால்வாயைப் பற்றியும், வேதாரண்யம், நாகப்பட்டினம் கால்வாய் போக்குவரத்தை அபிவிருத்தி செய்யவும் என்ன யோசனை கூறி இருக்கிறார்கள் ?